நபிகள் சிரோமணியான நமது நாயகமவர்கள் "இன்ஸான் தன்னை அறிவது பறுலு என்றும், அப்பால் தலைவனையறிவது சுன்னத் தென்றும் கட்டளை செய்தார்கள்" தன்னை இன்னமாதிரிதான் என்று எவன் திட்டப்படுத்திக்கொள்வானோ! அவன் மிகவும் இலேசாக அந்த மகாமிலேயே தன் றப்பையும் இன்னதுதான் என்று உணர்ச்சி செய்து விளங்கிக்கொள்வான். இதைப்பற்றி நபிகள் சிரோமணியான நமது நாயகமவர்களும், "மன் அறப நப்ஸஹு பகத் அறப்பறப்பஹு" என்று சாட்சி கூறியிருக்கின்றார்கள். இந்த திருவாக்கியத்திற்கு உரிய அர்த்தமாகிறது, எவன் ஒருவன் தன்னுடைய பூதியங்களை அறிந்தானோ! அவன் தன்னுடைய றப்பானியா வென்னும் பூரணத்தையும் அறிந்து கொள்வான்" என்பதாம்! இதனால் சந்தேக மற்று மஅரிபாவை அறிந்து கொள்ளவும்.

---

## 25-வது திருப்பாடல்

இறையை யறிவது மெப்படிச் சொல்லடி சிங்கி அது
இறையெங்கு நின்றுடுந் தன்நினை வாமடா சிங்கா

## திரவிய உரை.

வினா:—ஆமா ஆஷிக்காளவனே! நீ தன்னை யறிவது இன்ன விதம் தான் என்று முடிவு சொல்லி விட்டாய். அது போல் தன் தலைவனையும் அறிவதை இன்ன தன்மை தான் என்று சொல்லி விடு.

விடை:—சேனப்பா மஉஷூக்கானவனே! அதையும் முடிவாக சொல்லுகிறேன். அந்த தலைவனாகிய றப்பானியாகிறது, இந்த வுடலென்னும் பதினெண்ணாயிரம் ஆலத்திலும் ஏகமயமாய் நின்று காரியாதிகளை நடாத்தாட்டி வரும் தன் ஊசாட்டமென்னும் நினைவாக இருக்கும்.

## கருத்துரை

நினைவு எப்படி யப்பானியாவின் சிபத்தில் உள்ள தென்றால், அதாவது நினைவு ஊசாடாத பட்சத்தில் உலகம் ஒன்றுமே கிடை

யாது. எப்படியென்றால், ஒருவன் பேசிக் கொண்டிருக்கும்போது திடீரென்று படுத்துறங்க நாடுகிறான். அந்த நாட்டமே நினைவு. அது அவனை நித்திரையில் வைத்தாட்டுகிறது. அவ்விதம் ஜடலத்தையும் மற்ற பூதங்களையும் மயக்கி தூங்கவைத்து விட்டுத்தான் தூங்காமல் அசையாமல் அரூபியாய் இருக்கின்றது. ஜடலமும் மற்ற தப்ஸாகளும் ஒன்றுடன் ஒன்று விபரீதப்பட்டு மரணித்த பிறகு அந்த நினைவானது தன் சூக்ஷ்மத்தென்னும் வல்லமை ஹிக்மத்தால் அறிவென்னும் வாகனத்திலே பிரயோகம் பண்ணிக்கொண்டு அந்தரமாய் பாய்ந்து விடுகிறது அப்பால் அது மற்ற கோலங்களை தன் முகப்பத் தென்னும் உதிப்பில் நின்றும் ஸ்ருபிக்கிறது. இந்த இல்மில் வந்து நுழைந்து பார்க்க வேண்டிய லட்சியம் முக்கியம் தேவையான தல்ல. ஏனென்றால் மஅரிபா என்பது இரகசியபாதையான தாலே, அதன் உள் உடைவான பாரிய கடவுளைப்பற்றி சற்று மறைத்துக்கொள்ள வேண்டிய கடமை ஞான நூல் எழுதும் ஆசிரியர்களுக்கு இருக்கின்றது. எழுதுவதும் சொல்லிக் காட்டுவதும் சில மகாம்கள் வரையிலும் தான் ஆகும். அதற்கு மேலிட்ட மகாமில் எழுத்தும் பேச்சும் கிடையாது. ஆலோசிப்பும் ஊசாட்டமு மாத்திரம் உபயோகப்படும் அதற்கு மப்பால் உள்ள லாமகானில் ஆலோசிப்பும் ஊசாட்டமும் தானே ஒழிந்துபோய் நெருப்புடன் விறகு கலந்த மாதிரி வஸ்துடன் வஸ்தாய விரவிக் கலந்து சதா ஆநந்தியாய் நினைவுடன் கனவாய் மிதந்து கொண்டிருப்பது தான் ஞானத்தின் அந்த மாயிற்று. இந்த இல்மை உனக்கு இவ்விதம் உதாரணமாய்ச் சொல்வான்யார்? ஒருவனையுமே இந்தக் கலிகால புரட்சியில் நீ நம்பாதே! இவ்வளவு பார தூரமான அரும்பெரும் பொருளை இப்படி விஸ்தரிக்கத் தக்கள மஹான்கள் உன்னிடம் வலியவரமாட்டார்கள். எல்ல காரியங்களுக்கும் உன் முயற்சியே காரணம்:—உதாரணம்.

''அறிவை அறிந்தவர்கள் ஆயிரத்தி லொன்று
அருளை யறிந்தவர்கள் இலட்சத்தி லொன்று
குருவை யறிந்தவர்கள் கோடியினி லொன்று
கருவை யறிந்தவரைக் காண்பதுவு மரிதே.''

என்ற மாதிரி நீ அவர்களை யறியவும் உனக்கு வல்லமை போதாது. என்னுடைய திரவியவுரையே உனக்கு காமிலான குருவென்று இதன்படி தவத்தைச் செய்து கொள்வாயாக என்பதாம்.

## 26-வது திருப்பாடல்

தன்னுள் விளங்குந் தவமென்ன சொல்லடி சிங்கி அது
தன்னை மறந்து தவத்தி லிருப்பது சிங்கா.

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! தானாகிய இந்த இன்ஸான் ஜடலத்திற்குள் விளங்கி யறியக்கூடிய தவமானது, எப்படி செய்கிறது? அதன் விபரம் தெரியப்படுத்தவேண்டும்.

விடை:—கேள் மடஷூக்கானனே! அதென்ன வென்றால், ஜடலத்தை மறந்து விட்டு ஏக தவத்தில் இருந்து கொள்கிறதாக இருக்கும்.

## கருத்துரை.

ஜடலத்தை மறந்து விட்டு ஏக தவத்தில் இருக்கும் விபரமாகிறது:—ஐந்து பூதிய வாசல்களையும் அடைத்து, உலக எண்ணங்களை அற ஒழுத்து, ஒரு கவலையும் இல்லாமல் அரவம் ஒடுங்கின ஓரிடத்தில் தனித்தும், பசித்தும், தூக்கமற்று விழித்திருந்து சுவாசத்தை "இல்" என்று உந்திக் கமலத்தில் இருந்து இழுத்து "தில்" என்கின்ற தாமரையின் நடுவே அல்லாஹூ என்று வைத்து. சூரியகலையுடன் சந்திரகலையையும் பரஸ்பரப்படுத்தி அதாவது கலந்துகொள்ளச் செய்து வெளியே விடுகிறது. அவ்விதம செய்யும் சமயம் துனியாவின் வியாபகம் ஒன்றுமே அந்த மன நாட்டத்தளவில் வந்து ஊசாடிடப்படாது. அவ்விதம் ஊசாடுவதால் நீ செய்த தவமெல்லாம் நாச மடைந்துபோய் இங்கும் அங்கும் நற்கெதி கெட்டுப்பாழ் பட்டுப்போவாய். இது இருக்கட்டும்.

அப்பா அறிவுடைய மகனே! நீ நான் சொன்ன விதம் போல் உன்னை பனவாக்கி நினைவுடன் விரவி இஷ்க்கென்னும் க்யான மோகத்தை அதன்பேரில் வைத்து ஓர்மையை நல்ல ஸ்திரப்படுத்து வாயானால், உன்தன்னுட்டமென்னும் பரிபூரண

நந்த நினைவானது உள்ளில் நின்றும் இல்ஹாமாசி வெளியாகும். அது வெளியாகும் பஹாபூரண ஸ்தலமானது நேத்திரமென்னும் பெரிய திருநாமத்தின் அருஷேமு அல்லாவாக இருக்கும். அதில் நீயும் உன்நினைவும் ஏகறு பட்டு நீ என்பது இல்லாமலாகி ஏக மோகமான பொழுது, நீ என்னும் குதுலியானது தஜல்லி யாத்தாகி, முதலாவது ஒரு சுத்த வெண்மையான ஒளிவாய் ஒரு விளக்குச் சுடர்போல் சுழிமுனை என்னும் மகாமில் வெளியாகி மறைவதும், அப்பால் நின்றது நிற்க பளீச் பளீச் என்று மின் வெட்டி மறைந்தாற்போல சுடர்வீசி மறையும்; அதை கண்காட்சி யாக தரிசித்த நாள்களில் உனக்கு ஒருவித மயக்கமும் தியக்க மும் வரும். நாட்டமும் ஒரு இடத்திலும் தரிபடாமல் நோக்கின நோக்க மெல்லாம் உன்கண் பார்வைக்கு ஒரே ஒளி மயமாகவே தோன்றித் தெரியும். அப்பால் சிலகாலம் சுவாசம் பந்தனப்பட்டு இஷக்குடன் ரஹித்து உன்னை மறந்த தன்மையாக, சில வாரங்கள் வரைக்கும் சொக்கி வாசியுடன் நாட்டந் தட்டி நின்று குலாவி அப்பால் பழய நிலைமையில் இறக்கி விடும். இதை இன்ஸான் காமில் ஆசிரியர் "உறூஜ் நுஜூல்" என்று சொன்னார்.

அப்பால் சிலகாலம் இவ்விதம்செய்த தவமானது மீறிப் பாய்ந்தால் அதாவது தன் நிலைக்குள்தான் நிலை பட்டவுடன் உன் றூஹ் என்னும் கமல முகம்மதிய்யா வென்ற றூஹானி யான தன்னுட்டமானது, ஒரு முகவுரை கீறுவ பத்து வயது வாலிப ஸ்திரீயின் சூரத்தில் காலில் தங்கஜோடிட்டு தலையில் ரத்னக்கிரீடம் இட்டு ஒளிவென்னும் போர் வைக்குள் மறைந் தவனாய் உன் வடிவத்தில் வெளியாகுவான். அது தான் நீ என்ற தன் நாட்டமாக இருக்கும். அவ்விதம் வெளியான அந்த சூரத்தானது மகா சிவகாமி சூருபத்தை யுடையவன். ஆகையால் அவன் காட்டும் அனேக வித்தை இந்திர ஜால விநோத நூதனசல்லாப சரசத்தில் நீ சொக்கி யதனிடம் வரம்பெற்ற பிறகு உனக்கு அவன் இருஸ்தன மென்னும் இடகலை பிங்கலை என்ற பாலாமிர்தத்தை உன் வாயில் வைத்து ஊட்டு வான். அதில் ஒரு திவலை உன்வாயில் நுழைந்த மாத்திரத்தில் இனி ஒரு பொழுதும் உனக்கு பசி என்பது இல்லாமல் அற்றுப்

போகும். அதுதான் காய சற்பம் என்று நமது நபிகள் சிரோன்மணியவர்கள் அலியவர்களுக்கு உபதேசித்தார்கள். இதன் முழு விபரம் ஒரு மட்டில் அடங்காது ஆனதாலே இவ்வளவுடன் முடித்துக் கொள்கின்றேன்.

## 27-வது திருப்பாடல்

*என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி அது*
*ஒன்றைப் பொருந்தி யொடுங்கி யிருப்பது சிங்கா.*

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவளே! முன் சொன்ன வுரையில் தன்னை இல்லாமலாக்கி விட்டுத்தவத்தில் இருக்கவேண்டுமென்று சொன்னாயே! அது எந்த விதமாக தன்னை மறந்து பனா செய்கிறது. அந்த விதத்தை இன்னமாதிரி என்று தெளிவாகச் சொல்.

விடை:—கேள் மஉஷூக்கானவனே! அதாவது, ஒரு வஸ்து உன்னில் பிரதான கருவியாக இருக்கின்றது. அதில் நீ விரவிக் கலந்துக் கொண்டு மற்ற உலக நாட்டங்கள் யாவற்றையும் ஒடுக்கிக் கொள்கின்றது.

## கருத்துரை

உள்ளில் ஒரு வஸ்து பிரதான கருவியாக இருப்பதானது நினைவாக இருக்கும். அந்த நினைவே "தான்" என்று உணர்ந்து அத்துடன் நாட்டத்தைப் பொருத்தி விடச் செய்து புலன்கள் பொறிகள் ஐந்தையும் ஒடுக்கிவிட்டால் ஜடலம் "தான்" என்ற ஒரு ஐக்கிய மற்று பனாவாகி விடும். நாட்டமும் நினைவும் ஒன்று பட்டுபோகும். நெருப்புடன் விறகு சம்பந்தப் பட்டவுடன் அந்த விறகும் நெருப்பாய்ப் பற்றிக்கொண்டு பழைய விறகென்ற சுயகுணம் பனாவாகிப் போகுவதுபோல், நாட்டமும் நினைவும் ஒன்று பட்டவுடன் "தான்" என்ற அகந்தையான இந்த ஜடல பூதங்கள் எல்லாம் பனாவாகி "ஒன்று" என்னும் வஹ்தானிய்யத்தின் துறையில் கூடிக்கொண்டு கல்க்கு என்ற காரணப் பெயர் மாறி ஹக்கென்ற இயற்கை பெயருண்டாகி விடும். அப்பால் அந்த மனிதாத்மாவானது பரமாத்மாவாகி, எல்லா வல்லமை

யும் தான் பெற்றுக்கொண்டு, எக்காலும் அழியாத சுயம்பென்ற எல்லாவித ஏகாதி பத்தியங்களும் உரிய சுதந்தரத்தைத் தானாக வே அடைகிறது. இப்படித்தான் மஹாத்மாக்களான குதுபுமார்கள். எல்லா சுதந்தரத்தையும் அடைந்து நினைத்த பாரிய கருமங்களைச் செய்தார்கள். ஆனதாலே நீயும் அவ்விதம் செய்தால் உனக்கும் அந்த மஹாப்பரஸ்பரசம்பந்த சுதந்தரம் தடைஇல்லாமல் கிடைக்கும். அப்போது இந்த உலக கோடி சரா சரங்களெல்லாம் நீயாகவே நின்றுடுகிற ஒரு பாரதூரமான தஜல்லியைத் தெரிவாய். ஆனதாலே இதற்கு மேல் சொல்லும் வகையில் இந்த மஹாவிஸ்தரிப்பை அறியாதவன் ஒருபோதும் அந்த பதவிக்கு உரியவனாக மாட்டான்.



## 28-வது திருப்பாடல்

என்ன விதமாக வென்றைப் பொருந்தலாம் சிங்கி அது
எ*லா மறந்து மிருளா மிருபது சிங்கா.

## திரவிய உறை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! அவ்விதம் ஒரு வஸ்து வென்றும் பிரதான கருவியாக்ய நினைவுடன் தன்னுட்டத்தைக் கலந்து கொள்ளும் விதம் என்ன மாதிரி நீ தான் விவரப்படுத்த வேண்டும்.

விடை:—கேளடா மஉஷூக்கானவனே! அதாவது நீ யாகிறவன் இந்த தூல சரீரத்துடன் என்னென்ன தொழிலில் மிருக்கின்றையோ! அவைகள் அத்தனையும் விட்டொழித்து உன்னை சாஸ்பதமாய் உற்றுப்பார்ப்பாயானால் அந்த மகாமில் வெறும் இருளையே யன்றி வேறொரு உபாதிகளையும் காண்கமாட்டாய்

## கருத்துரை

அவ்விதம் ஒருமையான நிலபரத்தில் தரிப்பையானால் நீ பனுபடுத்திக்கொண்டு ஹக்கைக்கலந்து விட்டதான மேல் பதவியில் உயர்ந்து கொண்டாய். இதுதான் சாருவதற்கு முன்

சாகிறது என்று ஞானவான்களெல்லாம் சொல்லிக்கொண்டு போனதும் இதுதான். எப்போது நீ மரண மென்னும அருவருப்பான பாணத்தை அநுபவிப்பதற்கு முன்னே இந்த விதமான வல்லமை ஹிக்மத்தால் மரணித்துக் கொண்டாயாகில் இனி ஒரு முறை உனக்கு அந்த அருவருப்பான மரணம் ஏற்படும் மென்று நீ கனவிலும் நினையாதே. உதாரணம் குணங்குடியார்:—

இஷ்டப்படிக்கு யாங்கொண்டு கொஞ்சவும்
எனக்கு பயந்து யமன் நின்று கெஞ்சவும்; (வங்கென்ற)

என்று சொல்லிப் போயிருப்பதை நீ சற்றுக் கவனித்துப்பார். உன் மனக்கழுதையானது உன்னைக் கண்ட மடடும் இழுத்துக்கொண்டு போய் உலக மருட்டென்கிற, பீக்காட்டனவில் விடும். அதிலெல்லாம் நீ மயங்கித் திரியாதே ஒரு உப்புக் கல்லுக்கும் பிரயோசனப்படாது. பொய் என்பது கைமெய்யான இந்த அற்ப சொற்ப உலகத்தின் மாய சுகங்களை உன்புறங்காலால் தள்ளி ஒதுக்கி விட்டு தப்பினேன் என்று என் திரவிய ஞான மென்னும் ஆகாய விமானத்தில் வந்து ஏறிக் கொள். இதானது கூடிய சீக்கிரம் உன்னை ஹக்கில் கலக்கச் செய்து உள்ள படியே உனக்கு உரிய சுதந்திரத்தை வாங்கி உனக்குக் கொடுக்கும். அப்போது நீ காலகாலமும் அழியாவரம் பெற்றிருந்து சகல பேரின் பங்களையும் அனுபவித்து மற்ற சிருஷ்டிகளை யெல்லாம் ரக்ஷிக்கும் எஜமான் தனத்தில் தரித்து வெற்றி பெற்ற ஜயசீலனு வாய். இந்த மகாமில் தரித்திருந்து கொண்டுதான், மஹாத்மா ஷெய்குமன் சூறுல்ஹல்லாஜி "அனல்ஹக்" அதாவது நான்தான் அல்லா என்பவன் என்னும் அர்த்தம் புரிகிற ஒரு உண்மை வாக்கியத்தைச் சொல்லினுர்கள். இதையும் நல்ல வன்றிக் கவனித்துப் பார்.

---

## 29-வது திருப்பாடல்

ஒன்றென்று சொன்ன வுயிர் நிலை யென்னடி சிங்கி அது
டன்னு லுதிப்பல முன்னால் நிலைவடா சிங்கா

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! நீ ஒன்றென்று சொல்லிக்கொண்டு வந்த அந்த நினைவென்னும் உயிர் நிலையானது கருமத்தில் எதுவாக இருக்கும்? அதை விஸ்தரித்துச் சொல்.

விடை:—கேளடா மடஷிக்கானவனே! அதாவது உன் சரீரம் விளைந்து உதிப்பாகும் முன்னேபே உற்பத்தியான நினைவாக இருக்கின்றது.

## கருத்துரை

ஒரு கருமத்தை உன்னி உதிப்பென்ற சப்தம் உண்டாகுவதற்கு முன்னமே அந்த உதிப்பை எண்ணிக் கொண்டு உன்னிற்றே! அதாவது தன்னுட்டமென்னும் நினைவாகத்தான் இருக்கும். இதை உன் மூளைக்கு எடுத்துப்பார் அப்போது தெரியவரும். இன்னும் நல்ல கவனித்துப்பார். நீ ஒரு இடத்துக்கு போகும்போது உன் சரீரத்தை எது நடத்துகின்றதோ, அதுதான் நினைவு. அந்த நினைவு எண்ணி தன்னளவில் உன்ன அதாவது பூதநப்ஸாக்களுக்கு உதிப்புச்செய்ய, நப்ஸாகள் எழுந்து சரீரகளத்தைத் தூக்கிக் கொண்டுபோகும். அதனால் சரீரம் என்பது ஒரு கட்டைத்துண்டு என்றும், அதற்குள்ளிருந்து ஆடுகிற நெருப்பு, காற்று, தண்ணீர், மண் நான்கு பூத சக்திகளும் இந்த சரீரக்கட்டையைத் தூக்கி எடுத்து இழுத்துச் செல்கின்றன. அப்படி இழுத்து கொண்டு போகும் பூதசக்திகளுக்கு அறிவைக் கொடுத்து அதனதன் காரியங்களை நல்ல ஒழுங்காக நடத்திக்கொண்டு போகும். சக்கரன் என்கிற மேல் சக்தியானது அந்த நினைவாக இருக்கும். அந்த நினைவு ஒன்றே சரீரத்தின் தலைமைத் தளத்திற்கும், உலகங்களின் சிருஷ்டிப்பிற்கும் காரண காரியமாக நின்று பராடசிக்கின்றது என்று சந்தேஹமற தெளிந்து, இருதயத்தில் உறுதியுடன் ஒப்புக் கொண்டு அறிந்து, தன்னை அதனுடன் கலந்து கொண்டு நிர்மலமாய் வாசாட்ட மொழிந்திருப்பதுதான் தவநிலை.

ஆரப்பா! இத்த ஞானத்தெளிவை அறிந்துக்கொண்டு தவத்தில் முயலுவையாகில் இதுவே தவம். வேறே நாட்டில் பலையில்

போய் என்ன செய்யப்போகிறாய்! அங்கு போனாலும் இதைத்தான் செய்வது. சில மஹான்கள் அவ்விதம் காட்டில் வனத்தில் சென்றும் தவஞ்செய்திருப்பது உண்மைதான். அது ஏதற்காக வேண்டி என்றால், இந்த மாருட்ட உலக காரியங்களில் மனமானது செல்லாமலும், கண்புலன் செவிப்புலன் முதலிய அவயங்கள் வீண் மருட்டலான செய்கைகளில் அகப்படாமலும் ஊசாட்டமற்றிருப்பதற்கேதான், அதை நல்ல சமிக்கையாகத் தெரிந்து கொண்டார்கள். ஆனபடியாலே நீ எப்படியாவது உன் நாற்ற துடக்கைக் கழுவி துப்புரவு செய்துகொண்டால் நீ காட்டில் இருப்பதும் வீட்டில் இருப்பதும் இரண்டும் ஒன்றுதான். இன்ஸான் என்பவன், அவன் விளைந்து வந்த அசுத்த உதிரத்தின் துர்விநியோகமான துடக்கை கழுவிக் கொள்ளாத பட்சத்தில் எந்த விதத்திலும் காரியம் சித்தி பெறமாட்டாது. சிருத்தல் முஸ்தக்கீன் பாலம் என்ற சுழிமுனை கடவைக் கடந்து மோட்ச மடையவும் இயலாது என்பதாம்.

## 30-வது திருப்பாடல்

கன்னி யெழுத்து கலந்திட மெய்விடஞ் சிங்கி அது
உன்னி யெழுந்த உயிர்நிலை யல்லவோ சிங்கா.

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்காளனே! கன்னி என்கின்ற வாலை மனோமணியானது உதயமாகிக் கலந்த இடமானது சரீரத்துள் எந்த இடமாக இருக்கலாம், அதை விபரித்து விடுவாயாக.

விடை:—கேளப்பா மஉஷூக்காளவனே! அதாவது உன்னுடைய இருதயக்கமலத்தில் நின்றும் உன்னால் உண்டாகி அப்பால் உதிப்புண்டாகிற உயிர் நிலையாக இருக்கும் என்பதாம்.

## கருத்துரை

வாலைமனோமணி என்பது இந்த ஜடலத்தில் ஆதிவஸ்துவாய் நிரம்பிய பிரதான பிரம்ம ஆத்மாவாக இருக்கின்றது. அந்த பரமாத்மாவானது நினைவென்னும் தன் நாட்டமாய்ப் பூரணித்திருக்

கின்ற நாஹூஸ்துஸியாக இருக்கும். எப்போது இன்ஸான் என்பவன் தன் சுதந்தரங்களை இன்ன தன்மை தான் என்று அறிய வில்லையோ, அதுமட்டிலும் வல்லமைத் தனமில்லாத பேடியாகத் தான் இருக்கின்றான். ஆனபடியாலே அந்த தன் நாட்டமானது ஒரு ஸ்திரீயின் ஸ்ருபத்தில் வெளியாகும் என்று ஞானவான்கள் முருமித்துக் கூறினது நம்பிக்கையான உறுதி என்பதற்குத் தடையே இல்லை. இதைத்தான் மஹரின் கவூரார் தமது பூஜாவிதியில்,

"வாமியிவள் வாமம்வைத்துப் பூசைபண்ண
மதியுனக்கு வேண்டுமடா வதிகமாக
காமியிவள் வெகுகாமி சிவகாமிரூபி
காணரிது சிறுபிள்ளை கன்னிகன்னி
ஆமிவளை யறிந்தவர்கள் சித்தர்சித்தர்
அறிந்தாலு மன தடக்க மறியவேணும்
நாமிவளை பூசைபண்ண நினைத்தவாறு
நாட்டிலே சொல்லவென்றால் நகைப்பார்களே.

என்று சொல்லிப் போயிருக்கின்றார். ஒருமனிதன் தனக்குள்ள சர்வ சுதந்தரங்களையும் ஞான குருவென்னும் அறிவினால் அறிந்து பரத்தோடும் பரமாயச் சேர்ந்து கொள்ளும் வரையிலும் அவன் எப்பேர்ப்பட்டயோகிவானாலும் சரி, அரசனானாலும் சரி, மற்றபடி எவனானாலும் சரி, அவன் அடிமைத்தன்மை என்கின்ற கீழ்ப்படியில்தான் இருக்கிறான் என்பதாம்.

———

## 31-வது திருப்பாடல்

எங்கும் பரந்த பெரும்பொரு ளென்னடி சிங்கி அது
அங்கிங்கு மெங்கு மகண்ட பெருவெளி சிங்கா.

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! ஏழை வஸ்தை நோக்கினாலும் தானாக நிற்கின்ற பெரிய பொருளான தென்ன, அதை இன்ன தென்று வெளியாக்கி விடுவாயாக.

விடை:—கேள் மடஷ்டிக்காளவனே! அதாவது ''அங்கு என்றுசொல்லும் நாட்டத்திலும், இங்கு என்று சொல்லும் நேட்டத்திலும் இருந்து வெளியாகிவந்த மஹாபாரதூரமான பெரிய ஆகாயமாகிய நினைவாக இருக்கும் என்பது.

## கருத்துரை

அங்கு என்பது நாட்டமென்று எப்படி யாருமென்றால், அங்கு என்று சுட்டிக்காட்டின ஞானச் சொல்லானது, தகப்பனுடைய ஞானிமிலிருந்து விளைந்த இந்திரியமாக இருக்கும். அப்பால் இங்கு என்றசொல்லானது தாயுடைய உதிரத்தில் கர்ப்பமாயிருந்த அந்த இந்திரியத் துளியானது இந்த மனித ஜடலத்தை யெடுத்துக் கொண்டதே அதுவாக இருக்கும். எங்கு என்ற சொல்லானது இந்த பூலோகத்தில் மானிட கோலத்தில் வந்து சகல வஸ்துகளிலும் நிறைபூரணமாய் நின்றதே அதுவாக இருக்கும். நீ கண்டு உணர்ந்து கொள் என்பதாம்.

———

## 32-வது திருப்பாடல்

அன்று மின்றுமழி யாப்பொரு ளென்னடி சிங்கி இரு
கண்ணையு மூட விருள்ளழி யாப்பொருள் சிங்கா.

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்காளவனே! எக்காலத்திலும் அழியாமல் நித்தியமாய் இருக்கப்பட்ட வஸ்தானது என்ன வென்று சொல்வாயாக.

விடை:—கேள் மடஷிக்காளவனே! அதாவது நீ இரண்டு நேத்திரங்களையும் மூடிக்கொள். அப்போது உனக்கு ஏக இருள் மயமாகத் தெரியும். கண்மூடினபிறகு இருளாக இருப்பது எப்படித் தெரிந்தது. அதை ஒரு அகக்கண் பார்க்கின்றது என்பதை நல்ல ஸ்பஷ்டமாய்த் தெரிந்து கொண்டாய் அல்லவா

அந்த இருளாக தான் இருக்கும். அதுதான் என்றைக்கும் அழியாமல் நித்தியமாய் நிற்கின்றது என்பதாம்.

## கருத்துரை

அந்த மனக்கண் என்ற நினைவு தான் "தான்" என்றது, அதை உணர்ந்து அத்துடன் கலந்து கொள்ளும் பட்சத்தில் சரீரம் பொன்மயமாய் கற்பமாய்விடும். அப்போது அந்த நினைவானது அழியாமல் நின்ற பான்மைபோல் தானும் தன் சரீரமும் அழியாமல் எக்காலமும் நித்திய வாழ்வைப் பெறுவாய் என்பதாம்.

---

## 33-வது திருப்பாடல்

ஆங்கார வுடலுக்கு மாணிதா னென்னடி சிங்கி அது
ஓங்கார மூலத்தி லுள்ளொளி யல்லவோ சிங்கா

## திரவிய உரை

வினு:—ஆமா ஆவிக்கானவனே! இந்த ஆங்காரமுடைய சரீரத்திற்கு ஆணிவேரென்பது என்னதாக இருக்கும். அதை விபரித்துச் சொல்.

விடை:—கேள் மஉஷிக்கானவனே! அதாவது ஓங்காரம் என்று சொல்லப்பட்ட மூலாதாரம் என்றும், ஹூஹூ என்றும், உள்ளுக்குள் உள்ள ஒளிவாக இருக்கும் என்பதாம்.

## கருத்துரை

மூலாதாரத்தின் உள்ளொளி என்பதைப் பற்றி முன் சைட்டுகளில் நல்ல தெளிவாகச் சொல்லி யிருப்பதினுலே இங்கு காட்ட வேண்டியது அவசியமில்லை என்பதாம்.

---

## 34-வது திருப்பாடல்

ஆணியாய் வந்த வரும்பொருளெனடி சிங்கி முன்
தோணிய சற்குரு மூதனுமல்லவோ சிங்கா

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! அவ்விதம் ஆணிவேரான மூலாதார ஒளிவு என்பது என்ன அருமையான பொருளாக இருக்கும். அதை அறிந்தால்தான் சந்தேகமறும் ஆனபடியாலே அதைத் தெளிவுடன் சொல்ல வேண்டியது.

விடை:—கேள் மஉஷூக்கானவனே! அதாவது உன்னுடைய சுதந்திரத்தை இன்னமாதிரி என்று ரூபித்துக்காட்டின அந்த சற்குருவாகிய அறிவென்னும் குண்டலியின் திருநாமம் என்கின்ற "ஹூ" என்றதாக இருக்கும் என்பதாம்.

---

## 35-வது திருப்பாடல்

இந்தப் பொருள்வந்த தெந்த வழியடி சிங்கி அது
அந்தக் கதிர்மதி வந்த வழியடா சிங்கா.

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! இந்த சரீரத்துள்ளே மூலாதார ஒளிவானது வந்தது எந்த வழியாக இருக்கலாம். நல்ல விபரமாக சொல்லி அருள்.

விடை:—கேள் மஉஷூக்கானவனே! அதாவது சூரியர் சந்திரர் எந்த வழியாக வந்தனவோ அதே வழியாகத் தான் இருக்கும் என்பதாம்.

### கருத்துரை

சூரியன் எங்குல் என்ன, சந்திரன் என்குல் என்ன, அவை இந்த ஜடலத்துள் என்ன விதமாக நின்றுடுகின்றன. எது

கேட்பாய், அதன் விபரம், தகப்பனுடைய சுக்கில இந்திரியமானது சூரியனும், தாயுடைய சுரோணித இந்திரியமானது சந்திரனாகவும், அது ரூபத்தில் வலது பக்க நாசியில் ஓடும் சுவாசம் சூரியனாகவும், இடதுபக்க நாசியில் ஓடும் சுவாசம் சந்திரனாகவும் இருக்கும் ஆகையால் இவை இரண்டுந்தான் ரூஹ் ரூஹானி என்னும் இரண்டு ஆத்மாக்களாக இருந்து சரீர நடவடிக்கை நடத்துகின்றது. இதுதான் மூலாதார ஒளி என்று ஞானிகள் மொத்தத்தில் சொல்கிறார்கள். தமிழ் ஞானிகள் இதைத்தான் ஓங்காரவட்டம் என்றும் சொல்வார்கள்.

காரியம் இவ்விதம் நுழைந்து கொண்டிருப்பதாலே. நீ இதன் வகுப்புகளைச் சிறுகச் சிறுக உணர்ந்து தானா வட்டத்தில் வஸ்ஸைத் தெரிந்து கொள்வையேயானால் எல்லாம் உன் கைவசம் சிக்கிக் கொள்ளும். அப்பால் நீ மேல்மீசை முளைத்த ஆண்பிள்ளையாவாய் நான் சொல்லும் ஒவ்வொரு கடவான உடைவுகளையும் நல்ல மனங்கவிந்து பார்த்தால், அது உனக்கு அகப்படும். ஏனென்றால் நீ பூலோக மாயம் என்ற பொய் நாற்றக் கருவாட்டை வாங்கி லேவாதேவி செய்தவன். ஆனதாலே இந்த மேன்மையான ஞானம் என்ற மாணிக்கத்தை மதித்துக்கொள்ள இலேசில் முடியாது. நல்ல ஊன்றி உணர்ந்து பார்த்து மதித்து மனதில் பதியும்படி பதித்து வைத்துக் கொள்வப்பா என்பதாம்.

———

## 36-வது திருப்பாடல்

சுத்த னொளிவு கலந்திட மெவ்விடம் சிங்கி அது
வந்த நடனந்தா னுடைய தற்பரஞ் சிங்கா.

## திரவிய உரை

வினா!—ஆமா ஆலிங்கனவனே! அப்படிப்பட்ட ஜடல கர்த்தாவாகிய ஒளிவானது எந்த இடத்தில் வைத்து இந்த தேஹத்துடன் கலந்துக்கொண்டது.

விடை:—கேள் மடஷேிக்காளவனே! "தஹ்துல் மௌஜூத்" என்னும் ரூஹானல் குதுஸியானது நின்று நடனமாடக்கூடிய தற்பரம் என்ற தன் கொலுவான இருநேத்திரங்களில் வைத்தே இந்த ஜடலத்தில் அது கலந்து உதய மாகிக்கொண்டு ஒளிமறைவாக நிற்கின்றது. ஆனால் அதுவே சூரியகலையாக இருக்கும். அதை அநுசரித்து நடக்கின்ற ரூஹானி என்பது சந்திரனில் கலந்து உலக நடவடிக்கைகளை நடத்தாட்டி வருகின்றது. எதலத்தில் குடிகொண்டு மிதக்கலந்தவனே! சந்திரனுடன் கலக்கின்ற ரூஹானி என்பதை முதலாவது வேறுடன் பிடுங்கி எடுத்து விடுவது முக்கிய கடமையாக இருக்கும். ஆனபடியினாலே நீ அந்தப் பெண்தன்மையான ரூஹானி யின் ஆட்டத்தை ஒடுக்கி விட்டு பார்ப்பாயானால் அப்போது தான் உனக்கு அந்த வல்லமை விளங்கும் என்பதாம்.

———

## 37-வது திருப்பாடல்

*உற்ற பொருளுக் குயிரெழுத் தென்னடி சிங்கி அது*
*நச்சர வாடும் நரநிலை யல்லவோ சிங்கா.*

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்காளவனே! நீ இதுமட்டிலும் மேலே சொல்லிக்கொண்டு வந்த நீதிப்பொருளாகிய அந்த வஸ்துக்கு உயிர்நிலையானது என்ன.

விடை:—கேள் மடஷேிக்காளவனே! அதாவது விஷப்பாம் புக் கொப்பாகிய கழிமுனைக்கு நேரேதெரிகின்ற (காபகௌஸைன்) என்கிற புருவமத்தியாக இருக்கும்.

### கருத்துரை

விஷப்பாம்புக் கொப்பென்று ஆசிரியர் சொன்னதாவது:— அதைஅறியாத பாவிகளை அந்திகாலத்தில் அதுவே அபாயம் செய்து

விட்டதினாலே அவ்விதம் சொன்னார்கள். இதன் பயன்களை புத்திமான்கள் உணர்ந்து தெளிந்துகொள்ள வேண்டியது என்பதாம்.

## 38-வது திருப்பாடல்

எட்டெழுத் தாக வெழுந்த வெழுத்தென்ன சிங்கி அது
மட்டி லடங்கா வடிவட்ட கோணமே சிங்கா.

### திரவிய உரை

வினா—ஆமா ஆஷிக்கானவளே! எட்டு எழுத்தாக இந்த ஜடலத்தில் எழுந்த எழுத்தாகிறது என்ன, அதன் மர்மங்களாவது என்ன, அதைச் சொல்ல வேண்டும்.

விடை:—கேள் மஉஷூக்கானவனே! அதாவது ஒரு மட்டிலடங்காத இன்ஸான் வடிவென்கிற எட்டுக்கோணமென்னும் அஷ்ட உருப்புகளாக இருக்கும். இதன் மர்மங்களைப் பற்றி விபரம் அறிய வேண்டுமானால் ஷாக்கீகத்துல் இம்ஸானில் பார்த்தால் இதன் தெளிவைக் கண்டு கொள்ளக் கூடுமென்பதாம்.

## 39-வது திருப்பாடல்

அஞ்செழுத் தாக வமைந்த எழுத்தென்ன சிங்கி அது
அஞ்சும் பொருந்திய வாகாய வட்டமே சிங்கா.

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவளே! எட்டெழுத்தன் காரண விபரங்களைப்பற்றிச் சொன்னது போல் அஞ்செழுத்தாக ஜடலத்தில் பொருந்திய ஒரு ஸ்தலத்தை ஒரே எழுத்தாக சூரத்துப்படுத்திச் சொல் வேண்டும்.

விடை:—கேளடா மடஷிக்காளவனே! அதாவது வெள்ளை வட்டம், சிகப்பு வட்டம், பச்சை வட்டம், கருப்பு வட்டம், இந்த நாலுக்கும் அடங்காமல் நேராக நடு நேத்ர மத்திபத்தில் நீலவட்டமாகத் தோன்றி அறுவேழு அக்லாவில் ஒரு நுக்தா ஸ்ருஷ்த்தில் அருபமயமாய் தெரியும்படியாய் அமைந்த அஞ்செழுத்திலும் கூடித் திரண்ட பிஞ்செழுத்தாக நிற்கும் கோலத்தைப்பார்! இதுவே கருத்தாகவும் சொல்லி வந்ததை நல்ல ஊன்றி உணர்ச்சி செய்து கொள்ள வேண்டியது. மஹரிபத்தைப் பிடித்தவன் தைரியத்தையும் கைவிருகப் பிடிக்க வேண்டியது. வைராக்கியம் ஞான ரஸ்தாவின் கூட வருத்துணையாக இருக்கவேண்டும் என்பதாம்.

---

## 40-வது திருப்பாடல்

அஞ்பத் தோரட்சர மறியநீ சொல்லடி கிங்கி அது
வஞ்ச மகார நடுச்சுழி மூன்றுமே சிங்கா.

## திரவிய உரை

வினு:— ஆமா ஆஷிக்கானவனே! இதுமட்டிலும் நீ சொல்லி வந்த தீர்ச்சையான தெல்லாம் உண்மையே. அதில் முக்கியமாய் அறியவேண்டிய ஐம்பத்தோரட்சரமாக இருப்பதால் அதை நல்ல விளக்கி சொல்ல வேண்டியது.

விடை:—கேளடா மடஷிக்கானவனே! அதாவது அஞ்சம் அகாரம் யாதெரு அச்சமில்லாத அலிபுடைய நீட்டத்தின் பாதையான நாசித்துவார நுனிக்கு நேரான நடுமத்திபத்தின் இரண்டு ஐன்யென்னும் கண்ணாக இருக்கும். ஒன்று அலிபாக இருக்கின்றது என்பதாம்.

## கருத்துரை

இதன் உள்கருத்தை தன் பீர்மார்களின் சமுகத்தில் தேரில் கண்டறிய வேண்டியது மூன்று வகையாக இருக்கின்றது, அதாவது, ஒன்று புருவமத்தி, மற்ற இரண்டும் கண்களாக இருக்கும்.

## 41-வது திருப்பாடல்

*கற்பக வாசி கலந்திட மெல்விடஞ் சிங்கி அது*
*உற்பன மூலத்தி னுள்ளொளி வல்லவோ சிங்கா.*

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! இந்த சரீரத்திற்கு சுவாச்க மாகிய வாசியானது கலந்து நிற்கின்ற இடமாகிறது எது

விடை:—கேள் மஉஷூக்கானவனே! அதாவது இந்த சரீரம் உற்பத்தியாய் வந்தபோதே ஒன்றாகச் சமைந்து நின்ற மூலாதார மானதாக இருக்கும்.

### கருத்துரை

சுவாசத்தின் அடிமூலமாகிறது ஐடலத்தை உற்பத்திசெய்த மூலவஸ்தாகிய ஆறு ஆதாரகளில் நின்றும் உதயமாய் வருகின்றது என்பதாம்.

---

## 42-வது திருப்பாடல்

*சத்தம் பிறந்திடுஞ் தலமேதும் சொல்லடி சிங்கி அது*
*உற்றசுவாச முயிர்நிலை வல்லவோ சிங்கா.*

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! ஜடத்திற்குள்ளே உதிப்பாகி மொழிச்சலானது எந்த ஸ்தலத்தில் நின்றும் உதயமாய் வருகின்றது சொல்லி விடுவாயாக.

விடை:—கேளடா மஉஷூக்கானவனே! அதாவது சந்திர சூரிய கலையான இரண்டு இருதய குழாய்களின் வழியாக மூச்சு ஓடிவரும் கற்பின் இந்திரியத்தில் நின்றும் உதிப்பாகிறது.

## கருத்துரை

உயிர் இரண்டு வகைகளாக நிற்கிறது. அதில் ஒன்று ஞாஹம், மற்றொன்று ஞாஹானியாக இருக்கிறது. ஞாஹம் சூரியன், அதாவது உஷ்ணநாடி. ஞாஹானி சந்திரன், அதாவது சிலேஷ்மநாடி. ஆகிய இவ்விரண்டும் ஒன்றுகூடி வருகிற ஸ்தலந்தான் உந்திக்கமலம் என்று எல்லோரும் சொல்லுகிற நுரை ஈரலாக இருக்கும்.

அப்பா! நீ முக்காணம் போட்டாலும் இந்த மானிட உலகத்தில் ஒரு குருவானவன் இந்த மாதிரி தெளிவாக அவிழ்த்துச் சொல்லமாட்டான். இதை நீ கண்ணாலே பார்க்கும் படியான ஒரு பாலத்துரை இருக்கிறது. அந்தத் துரையில் உன்னை நிற்பாட்டி இதோ பார் என்று காட்ட முடியும். அதற்கு நீ நம்மிடம் வரும்போது இந்த உலகப் பொருளில் ஒரு கனத்ததுகை நமக்கு நாட்டமிருப்பதனாலே அதற்கு சக்தி உள்ளவன் மேற்படி துகையைக் கொண்டு வந்து வைத்துக் கேட்டால் காட்டுகின்றேன் என்பதாம்.

---

## 43-வது திருப்பாடல்

கண்டு தொழுஞ்சிவ காரண மேதடி சிங்கி நம்மை
யுண்டு படுத்திய வுள்ளொளி வாலைதே சிங்கா

## திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்காளவனே! இருக்கண்ணாலே கண்டு உறுதிகொண்டு வணங்கக்கூடிய நப்புடைய வெளிச்சம் இந்த ஜடலத்தில் என்ன மூல காரண கருவியாக இருக்கிறது. அதை இன்னதென்று சொல்வாயாக.

விடை:—கேளடா மடஷிக்காளவனே! அதாவது இந்த ஜடலத்தில் ஒரு சிறுதுளியான இந்திரியத்தினாலே கற்பகக் குவளையில் வைத்து உண்டுபடுத்தி விட்ட உள்ளொளியாகிய ஞாஹால் குதுளியாக இருக்கும்.

### கருத்துரை

இந்த ஜடலத்திற்கு ஆதிகாரண வஸ்துவாக நின்று சமைப்பித்த உஷ்ண நாடியானது இரு நேத்திரங்களுக்குள்ளும் நின்று ஒளி செய்கின்ற படியாலே அதைக் கண்ணாலே கண்டு சந்தேகமற சமானுடன் ஒப்புக்கொண்டு அப்பால் அத்துடன் விரவிக் கொள்வதற்குரிய உபாயங்களைத் தேடவேண்டியது. அதுதான் மஹாரிபாவாக இருக்கும். இதல்லாத மற்ற எவ்வித பாதைகளும் சரியானதல்ல. இன்ஸான் காமில்காரரும் இதையே வற்புறுத்துகிறார். அல்லாவும் குர்ஆனில் இதையே சமிக்கினை செய்கின்றான். அறிவுடைய சிநேகிகள் கண்டுபிடித்துக் கொள்ளவும் என்பதாம்.

## 44-வது திருப்பாடல்

எப்படிக் கண்டேட னிறையை வணங்கவாம் சிங்கி அது
நட்புடன் ரண்டு நடுநிலே காண்பது சிங்கா.

### திரவிய உரை.

வினா:—ஆமா ஆவிக்காளவனே! இறை என்கிற பரிசுத்த வஸ்த்துவை என்ன விதமான தோற்றத்தில் கண்டு வணங்குகிறது அதை இன்னவிதம் என்று சொல்ல வேண்டியது.

விடை:—கௌடா மடவுசிக்காளவனே! அதாவது இந்த ஜடலத்தின் பிரதான கருவியாக அமைந்து சரீர உருப்புக்களை நடத்தாட்டி வருகின்றதே அந்த இரண்டு நேத்திரங்களை உறுதியான ஜனுல் எகீனை சமாகக்கொண்டு, அதனுள் நின்று சராசரங்களெல்லாம் இலங்கிக் கொண்டிருக்கானின்ற நூறுல் குதுஸியைத் தெரிசிக்கின்றதாக இருக்கும் என்பதாம்.

### கருத்துரை.

நேத்திரங்களில் சுயம்பான பளிக்கிச் சுடர்போல் கலப்பற்று நின்று துலங்கி வீசாநின்ற தாத்துர் றஹ்மானியானைக் கண்ணாலே

கண்டு ஜுகாவுடைய நேரத்தில் தெரிசித்து வைராகிய நிலையுடன் இஷ்க்கின்புரத்தால் தன்னுட்டத்தில் வைத்துப் பாராட்டித் தாராட்டினால் அப்போது வேற்றுமையான அமா பனுவாகி தன்னுட்டமே தானென்ற நினைவாகி ஒன்றுபட்டு விரவிக் கொள்ளும். அப்பால் அத்த மகிமையை என்னவிதம் என்று சொல்ல முடியும். அனுபவித்த வல்லமை வஸ்துதான் அறியும் என்பதாம்.

---

## 45-வது திருப்பாடல்

நடுநிலை யானதை நாடுவ தெப்படி சிங்கி அது
நாட்டந் தேட்ட மோட்ட மாட்ட மொன்றுகினால் சிங்கா.

### திரவிய உரை

வினா:—ஆமா ஆஷிக்கானவனே! இரண்டும் நடுநிலை என்பதைத் தீர்ச்சையானபடி சொல்லிவிட்டாய் அதன் படி அதை நாடிப் பிடிக்கும் உபாயம் என்னவிதம் அதை அறிவித்துவிடு.

விடை:—கேளடா மஉஷூக்கானவனே! அதாவது உன்னுடைய வெளி அறிவாகிய வீண் நாட்டம் என்ற வெகுளி வெஞ்சலம் என்ற உபாதிகளையும், தேட்டம் என்ற உபாதிகளையும், ஓட்டம் என்ற சுவாச நிலைமையும் ஒன்று படுத்திக்கொண்டு நுழைந்து விடுகிறது. இதுதான் கமாலுற் றஹ்மானியா என்று பெரிய ஞானியார் சாகிபு அவர்கள் கடைப் பிடித்து கூறியிருக்கின்றார்கள் என்பதாம்.

---

## 46-வது திருப்பாடல்

தேட்டமு நாலுந் திருத்துவ தெப்படி சிங்கி அது
திருவைப் பொருத்தி யொருமித் திருப்பதே சிங்கா.

### திரவிய உரை

வினா:—ஆமா மஉஷூக்கானவனே! தேட்டத்துடன் நாலும் சரிவரத்திருத்தி வரவேண்டுமென்று சொன்ன அந்தபடி அந்நான்கு

கருவிகளும் ஒற்றுமைப்படும் அந்த சூட்சமத்தை மெதுவாக உடைத்துவிடு.

விடை:– கேளடா ஆஷிக்கானவனே! திரு என்று மேலோர்கள் சொல்லிப்போன அந்த றூஹூயில் குதுளியை இடிக்கில் வைத்து தாராட்டிக் கொண்டு விடாத வைராக்கியத்துடன் தியானித்திருக்கிறதாக இருக்கும்.

## கருத்துரை

கரிய வண்டானது ஒரு சிறு கிரிமியைத் தூக்கிக் கொண்டு வந்து தன் மரத்துளையில் வைத்து கிர்ரென்று தாராட்டி உறுதியும் இஷ்க்கும் வைத்து ஆடின சிலகாலத்தில் சிறு கிருமி மேற்படி வண்டாகி பறந்து போவது போல், ஞானத்தை ஆராய்ச்சி செய்ய வந்த மகனே! நீயும் அதுபோல் உன் அசலியத் தான நேத்ர ஜோதியின் ரதத்தின் பேரில் இஷ்க்கும் உறுதியும் வைத்து தாராட்டி வருவையே ஆனால் அதைப் போல் ஒளியமயமாய் விடுவாய் என்பதாம்.

—◦—

## 47-வது திருப்பாடல்

ஏநமித் திருக்கின்ற வோரிட மெவ்விடஞ் சிங்கி அது
வொன்று மிரவும் பகலு முதிப்பிடம் சிங்கா

## திரவிய உரை

வினா:– ஆகா ஆஷிக்கானவனே! அவ்வித வைராக்கியத்தைப் பற்றிப் பிடித்திருக்கின்ற இணையற்ற அந்த திருஸ்தலம் என்னதாம் அதை விபரித்துச் சொல்லிவிடு.

விடை:– கேளடா மஉஷூக்கானவனே! அதாவது இரவு பகல் என்று இரண்டும் எந்த இடத்தில் நின்றும் உதயம் செய்கின்றதோ அந்த இடமாக இருக்கும். இதன் விபரம் கீழ் பாராக்களில் அடிக்கடி கூறிவருகிறதினாலே இங்கு கருத்துரை சொல்லவில்லை என்பதாம்.

## 48-வது திருப்பாடல்

இரவும் பகலும் மென்றுன தெவ்விடஞ் சிக்கி அது
வெப்போது மிருளா யிருப்பது முனையே சிங்கா.

### திரவிய உரை

வினு:—ஆமா ஆஷுக்கானவனே! இரவும் பகலும் ஒன்ருகச் சேர்ந்து இருக்கின்ற நலமானதை விஸ்தரித்துச் சொல்ல வேண்டியது.

விடை:—கேளடா மடஷுபிக்கானவனே! அதாவது எப்போதும் ஒரே இருள் மயமாக இருப்பது கபாலம் என்ற முனையாக இருக்கும். முனைதான் இந்த ஜடலத்திற்கு உன்னத பீடமாக இருக்கும். அந்த முனைக்கு நடுவேதான் அறுஷெமு அல்லாவின் உதய ஒளிவானது பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அதை எந்த விதமாக அறியவேண்டுமானுல், இருகண்கள் என்ற தேஜஸ் கண்ணுடிக்குள்ளே பார்த்தால் பளிங்கு விளக்குப்போல் தோன்றும். உடனே கண்டு சமான்கொள்ள வேண்டியது. இதைப்பற்றி குர்ஆனும் அதற்கு முன்வந்த மற்றும் மூன்றுவேத நூல்களும், இன்னும் பல்லாயிரங் கோடிக்கணக்கான ஞானகலைகளும் சாட்சி கூறுகின்றதை நல்ல மஹாத்துமாக்களை அடுத்துப்பார் கூறுவார்கள் என்பதே.

—o—

## 49-வது திருப்பாடல்

இரவும் பகலும் பிறப்பிட மெவ்விடஞ் சிங்கி அது
விருளி லுதித்துள்ளி வந்த தடி மூலஞ் சிங்கா.

### திரவிய உரை

வினு:—ஆமா ஆஷிக்கானவனே! இரவும் பகலும் உற்பத்தியான ஸ்தலமானது, எந்த ஸ்தலம். அதை நல்லபடியாகச் சொல் வாயாக.

விடை:—கேளடா மடஷுசிக்காளவனே! அதாவது இருளான மூலையில் நின்றும் உதித்து, அப்பால், அடி மூலமாகிய உந்திக் கமலத்திளிடமாக வந்து நிற்கின்றது. இந்த ரகசியம் அவ்வளவு பகிரங்கமாகச் சொல்லப்படாது என்பதாம்.

———

## 50-வது திருப்பாடல்

இரவும் பகலு மெழுந்திட மெவ்விடஞ் சிங்கி அது
ஏகாந்த வுள்ளல்வந் தேறிய தாமரை சிங்கா.

### திரவிய உரை

வினு:—ஆமா மடஷுசிக்காளவனே! நீ மேற்கூறிய இரவு பகல் என்ற கருவிகள் இரண்டும் எழுந்து நிறைதானது எந்த இடம் அதை நல்ல தெளிவாகவும், உறுதியாகவும் சொல்ல வேண்டியது.

விடை:—கேளடா ஆஷிக்காளவனே! அதாவது ஏகசொரு பத்தில் நின்றும் மூலையாகி, அப்பால் உதிப்பாகி, உதிப்பு நினைவாகி, நினைவு உள்ளலாகி உதயமாகி எழுந்த தாமரைக்காயாக இருக்கும்.

———

## 51-வது திருப்பாடல்

இரவும் பகலும் பிரிந்திட மெவ்விடஞ் சிங்கி அது
எழுந்தறு கோணம் இடம்வலம் வாசியே சிங்கா.

### திரவிய உரை

வினு:—ஆமா மடஷுசிக்காளவனே! அந்த இரவு பகலானது பிரிந்து ஓடக்கூடிய. இடமானது எது, அதை நல்ல விபரப்படுத்தி அருளவேண்டியது.

விடை:—கேளடா ஆஷிக்காளவனே! அதாவது ஆதியில் கன்சுலி மக்பிதாத்தாகிய இருளில் நின்றும் உதித்தெழுந்த உல்லாலானது ஆறு ஆதாரம் என்னும் தத்துவ கருவியாக பிரிந்து கொண்டு இடம் வலம் உன்னும் சூரிய சந்திரர்களாகிய வாசியானது ஒன்று பட்டு திர்க்கும் இடமாக இருக்கும்.

## 52-வது திருப்பாடல்

இரவும் பகலும் நின் றுடிய தெவ்விடஞ் சிங்கி அது
எழுந்து நின்றுடுஞ் சுழி முனை மண்டலஞ் சிங்கா.

### திரவிய உரை

வினு:—ஆமா மடஷிக்காளவனே! அந்த இரவு பகல்கள் ஒன்று சேர்ந்து நின்றுடக்கூடிய இடமானது என்ன வென்று நீ சொல்ல வேண்டியது.

விடை:—ஆஷிக்காளவனே! அதாகிறது, இரண்டும் ஏகமயமாய் எழுந்து சூட்சியமாய் ஆடக்கூடிய சுழிமுனைவென்ற முக்கு முனையாகிய நடுஸ்தலமாக இருக்கும்.

---

## 53-வது திருப்பாடல்

இரவும் பகலு மிருப்பிட மெவ்விடஞ் சிங்கி அது
இராறு மோடிய வேரான நாள் கடா சிங்கா.

### திரவிய உரை

வினு:— மடஷிக்காளவனே! டி இரவு பகல்கள் எப்போதும் இருப்பாகத் தங்கி இருக்கும் ஸ்தலமானது எதுவாக இருக்கும் அதை சொல்ல வேண்டியது.

விடை:—கேளடா ஆஷிக்காளவனே! அதாவது பன்னிரண்டு கலையாக ஒடிச் செல்லாநின்ற சரீரத்தின் வேரான நான்கு பூதநாடிகளாக இருக்கும். விபரம் ஈராறு என்றது, சந்திரன் சூரியன் ஆகக்கூடி பன்னிரண்டு சரங்களாக இருக்கும். நாலு என்றது, மண், தண்ணீர், காற்று, நெருப்பு, ஆகா நான்காக இருக்கும் என்பதாம்.

---

## 54-வது திருப்பாடல்

இரவும் பகலு முதிப்பிட மெவ்விடஞ் சிங்கி அது
எறுமெட் டங்குல மிருவிழி நடுநிலை சிங்கா.

## திரவிய உரை

வினா:— ஆமா மடஷு ஒக்காளவளே! அந்த இரவு பகல் என்ற வைகள் உதயமாகி வருகின்ற ஸ்தலங்கள் எவை; அவை நல்ல தெளிவுபெறச் சொல்லவேண்டியது.

விடை:—கேளடா ஆஷிக்காளைவனே! அதாவது, எட்டு அங்குல வடிவமாக கமான் வளைந்திருக்கானின்ற இரண்டு நேத்திரங்களில் நடுவாலே நின்று கற்பூரதீபம் போல் வெளிச்சம் செய்யா நின்ற மஹா இந்திர சொருப வடிவாகிய ஹக்தர் றகுமானியாவில் நின்று மாக இருக்கும்.

### சருத்துரை

விபரம் இதில சொல்லப்போகுதல் மஹாரகசியமல்ல. காட்டாவின ஷெய்கு முதலிய மஹான்கள் யாவரும் ஒருமித்துக் கூறிப் போயிருப்பதனுலே நான் இவ்விடத்தில் அல்லாவுடைய ரகசியத் தை பலரும் பார்க்கக்கூடிய இந்த பகிரங்க நூலின் வாயிலாக அவிழ்த்துச் சொல்ல வேண்டிய தவசியமல்ல. இது கனைத்தெரு வல்ல இதை அறியாத அநேக மூடாத்துமாக்களெல்லாம் முரீதை ஒரு வியாபாரமாக விற்று வயிறு பிழைத்து வருகிருர்கள். இதைச் சொல்வதற்காக வேண்டித்தான் நாயகம் முஸ்தபா ரஸூல் சல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களை அல்லா, இரவில் தன் உதய பீடத்தனவில் வரவழைத்துப் பேசினுன். அதுதான் இரகசியம் பன்னீராயிரம் பேச்சென்று உலகத்தார்களுக கிடையில் வழங்கிற்று என்பதாம்.

---

## 55-வது திருப்பாடல்

இரவு பகலெக்றென்ளத்தைச் செல்லலாஞ் சிங்கி அது
இரவு பகல்மிட பின்கலே வாசியே சிங்கா.

## திரவிய உரை

வினா:—ஆமா மடஷு ஒக்காளவளே! நீ இது மட்டிலும் விப ரித்துக்கொண்டு வந்த மேலான உடைவுகளில் ஒரு காரியம் முக்

கிவப்பட்டதாக இருக்கிறது. அதாவது அந்த இரவு பகலென்றது மானுட ஜடவத்துக்குள், என்னதாக இருக்கும் சொல்வாயாக

விடை:— கேளடா ஆஷிக்கானவனே! அதாவது இரவு சந்திரகலை பகல் சூரியகலையாக யிருக்கும் என்று திட்டப்படுத்திக் கொள்வாயாக. இதுதான் இரவு பகல் என்று இந்த உலகத்தின் தோற்றத்தில் வருவதும் போவதுமாக நடைபெறுகிறது என்பதாம்.

## 56-வது திருப்பாடல்

இடகலை பின்கலை யென்னத்தைச் சொல்லலாம் சிங்கி அது
இடகலை சந்திரன் பின்கலை சூரியன் சிங்கா.

## திரவிய உரை

வினா:— ஆமா மடஷூசிக்கானவனே! இடகலை யென்றும் பின்கலையென்றும் ஞானவான்கள் சொல்லிப் போயிருக்கிறார்களே அதை இன்னதென்று நீதான் விபரிக்க வேண்டியது.

விடை:— கேளடா ஆஷிக்கானவனே! அதாவது இடகலை என்பது இடது நாசியான துவார வழியாகப் போகின்ற சுவாசமாகிய சந்திரனாகவும், பின்கலை என்பது, வலதுபக்க நாசியின் துவார வழியாகச் செல்லும் சுவாசமாகிய சூரியனாகவும் இருக்கின்றது என்பதாம்.

## 57-வது திருப்பாடல்

என்னத்தைச் சொல்லலாம் சந்திரம் சூரியன் சிங்கி அது
இடவல மாக எழுந்தோடு மூச்சடா சிங்கா.

இதன் தாற்பரியத்தை இதற்கு முதல் பாட்டு உடன் இணைத்துச் சொல்ல வேண்டிதவசியமான படியாலே அவ்விதம் காட்டியாயிற்று, ஆனதாலே இதில் அர்த்தம் அவிழ்க்கவில்லை என்பதாம்.

## 58-வது திருப்பாடல்

*சந்திரன் சூரிய னென்றுள தெவ்விடம் சிங்கி அது*
*கலையும் பொருந்து நடுச்சுழி மூலையே சிங்கா.*

## திரவிய உரை

வினா:—ஆமா மடஷ்டிக்காளவளே! அந்தவிதமான சந்திரன் சூரியன்கள் இரண்டு நன்றாகக் கலந்து நிற்கின்ற ஸ்தலமானது எது.

விடை:—கேளடா ஆஷிக்காளவனே! அதானது கழுத்தை வுக்கு மேலே உள்ள எழுவாள் மண்டலமாகிய தலைக்கு நடுவே பூதங்கள் ஐந்தும் ஒன்றுபட்டு வாசஞ்செய்கின்ற சுழி முனை என்னும் நாசிநுனிக்கு நேரே நடுமாத்திரமாக இருக்கும் காபகௌஸன் என்னும் புருவமத்தியின் மூலையாக இருக்கும் என்பதாம்

---

## 59-வது திருப்பாடல்

*என்னத்தி லேபால மேறிநின் றுடுது சிங்கி அது*
*உன்னுக்குள் வாசி நடனப் புரவிமேற் சிங்கா.*

## திரவிய உரை

வினா:—ஆமா மடஷ்டிக்காளவனே! நீ இது மட்டும் சொன்னதெல்லாஞ் சரி, இப்போது ஜடலமென்ற ஸ்தூல ஆதமியானது என்ன வஸ்துவின் மேல் சவாரிசெய்து இந்த ஆலமென்ற மாய்கை பாலத்தில் எறி நின்று ஆடிக்கொண்டு வருகிறது.

விடை:—கேளடா ஆஷிக்காளவனே! அதாவது உனக்குள்ளே பன்னிரண்டு சரங்களாகப் பிரிந்தோடும் சுவாசமென்ற திட்டியக் குதிரையின்மேல் ஏறி நின்று ஆடுகிறது பார். இதன் விபரத்தைக் கண்டவர்கள் இந்தப் பூலோக மாயவலையைக் கிழித்துக் கொண்டு போய் விடுவதற்குச் சந்தேகமல்ல என்பதாம்.

## 60-வது திருப்பாடல்

என்ன விதமாம எடுத்துநின் றுடலசம் சிங்கி — அது
ஏற்றவு மாற்றவு மிணங்கிநின் றுடிப்பார் சிங்கா.

## திரவிய உறை

வினு:—ஆமா மடஷிக்கானவனே! அந்த வாசி என்ற நடன சக்கிரத்தை எடுத்தாடுகிற விதம் என்ன மாதிரி.

விடை:—கேளடா ஆஷிக்கானவனே! அதாவது இல்லல்லா என்று ஏற்றி ஹூ என்று இறக்கி விடுகிறது. இப்படியாகப் பழகிக்கொண்டு வருவதுதான் இன்ஸான் கோலத்தை மறதி என்பதை விட்டும் மாற்றிப் பிடிக்கிறதாக இருக்கும். இதன் முழு தாற்பரியங்களையும் நான் எழுதி வெளிப்படுத்தியிருக்கின்ற ஞான மணிமாலை தாற்பரிய உரையில் நல்ல வெட்ட வெளிச்சமாக எழுதிக்காட்டி யிருக்கின்றேன். அதில் பேரய் பார்த்துக்கொள்ள வேண்டியது என்பதாம்.

---

## 61-வது திருப்பாடல்

மாற்றிப் பிடிக்க மருந்தென்ன சொல்லடி சிங்கி — அது
மாளாமல் மாண்டு மறந்து மிருப்பது சிங்கா.

## திரவிய உரை

வினு:—ஆமா மடஷிக்கானவனே! அந்தப்படியாக மாற்றிப் பிடிக்கிற ஸாதனம் எப்படி செய்தால் அது மாறும், அதற்கு உபாயங்கள் என்ன.

விடை:—கேளடா ஆஷிக்கானவனே! அதாவது சாகாமல் சாகிறது. கருத்தாகிறது என்னவென்றால் இந்த துனியாவின் ஆசாபாசங்கள் அற்று ஒரு இடத்தில் தனித்திருந்து "நான்" என்கிற அநாதீயத்தைப் பஜு செய்கிறதாக இருக்கும் என்பதாம்.

## 62-வது திருப்பாடல்

*அட்ட சஜங்க ளறிந்திட மெவ்விடம் சிங்கி* **அது**
*எட்டு விதமாக எழுதும் பலனடா சிங்கா.*

## திரவிய உரை

வினு:—ஆமா மடஷாக்கானவனே! இன்னொரு விடையைப் பற்றிக்கேட்கிறேன் அதாவது அஷ்டசஜங்கள் என்று ஞானவான் களின் சபையில் பேசிக்கொள்ளப்படுகிறதே! அதன் கருத்து என்ன தான் சொல்ல வேண்டியது.

விடை:—கேளடா ஆஷிக்கானவனே! அதாவது உன்னை கன்ஸானமக்பியாகிய கைபான நிலையில் நின்றும் இன்ஸான் ஜடலமாக உற்பத்தி செய்த தாத்துர் றகுமானிய வானது எட்டு விதமான மதங்கொண்டு எழும்பி சிரத்தில் எட்டு ஸ்தலங்களை சமைத்து எட்டு வகையான கற்பனையில் எழுதியிருந்த ஸாஸனத்தில் எழுதி முடித்து வெளியாக்கிற்று. இதுதான் அஷ்டசஜம் என்பது. இது ஜடலத்தில் எண்கோணமாகப் பிரிந்து ஸ்தூலத்தின் அஸ்தி பாரமாக நின்று கொண்டிருக்கின்றது என்பதாம்.

---

## 63-வது திருப்பாடல்

*உற்ற ஞானப்பொருளுத்தியாய்ச் சொன்னதார் சிங்கி* **அது**
*உத்தமர் பீருமு ஹம்மதுரைத்தது சிங்கா.*

## திரவிய உரை

வினு—ஆமா மடஷாக்கானவனே! இந்த மஹா ஞான புதைய லான இரத்னக் குறவஞ்சியை இந்த பூலோக வாசிகளுக்கு அவசியம் வேணுடி தெய்வ ஸாதனமாக செய்து உதவிய மஹான் யார் தெரியுமா அவர்களைச் சொல்வாயாக.

விடை: கேளடா ஆஷிக்கானவனே! அவர்கள் யார் தெரியுமா, அவர்களாகிறது இமாம் ஹல்லாஜி மன்ஸூர் றஹ்மத்துல்லாஹி

டைய ஞானத்துறையில் மூழ்கிய சங்கைக்குரிய சற்குரோதயத்தை வாய்ந்துள்ள ஸ்ரீமத் ஞானமணிக் கர்த்தாவாகிய நாயகம் தக்கலே உத்தமசீல விசால மேதாவாகிய பீர்முஹம்மது சாஹிபு ஒலியுல்லா அவர்களாக இருக்கும் என்பதாம்.

இந்தக் குறவஞ்சியின் திரவிய உரையை ஆராய்ச்சி செய்கிற தற்கு வந்த மகனே! ¡நான் இதில் கொட்டிவைத்திருக்கின்ற திரவியங்களை அள்ளிக் கொள்ளையாடிக்கொள். ஞானமணி, பிஸ்மில் குறம், மஅரிபத்துமாலே, ஞான முச்சுடர் பதிகம், ஞான குறம் ஞான பால், ஞான பூட்டு, ஞான ஒப்பாரி, முதலிய அரிய பெரிய ஞான வேதங்களில் நான் நுழைந்து மூடிகளைத் திறந்து விட்டிருக்கின்றேன், அல்லுடைய ஆண்பிள்ளையாக நீ இருக்கும் பட்சத்தில் தேவையான அளவு அள்ளி வாரிக்கொண்டு டதனமாக வைத்து என்றென்றும் அழியாத செல்வக் குன்னவனாக நிலைத்துக் கொள்வாயாக ஆமீன் என்பதாம்.

ஞானரத்தின குறவஞ்சி,

ஞானதிரவிய உரை

முற்றிற்று.



பிஸ்மில்லாஹி

## 2-ம் திருப்பாடல்

# ஞான ஆநந்தக் களிப்பு

### 2-ம் அவதாரிகை உரை

—— o ——

*தீன் தீன் முஹம்மது தீனே - எங்கள்*
*தீனெங்கள் தீனெங்கள் தீனெங்கள் தீனே*
*தீன் தீன் முஹம்மது தீனே.* (தீன்)

தீனபி யன்ன குருவாய்த்-திசை
ஆயிரத் தெட்டும் ஜபறூத்தி லாடித்
தாஜொளி தான்கண்டு கூவ - இறை
தானவ ளசையால் நோக்கியே பார்க்க
ஆன புகழிறை யாசை - அந்த
அன்னத்தின் மீதி லனுப்போற் றரிக்கத்
தானே கடலாய் வழிந்து - கடற்
றன்னிற் றரித்தானைக் கண்டுகொண் டேனே (தீன்)

(அவதாரிகை உரை) இந்த வுரையானது ஆசிரியரின் சொந்த ஞானக் கருத்தைப்பிடித்து எழுதிக் கொண்டு போகிறதாக இருக்கும். அதாவது நேர்வழியான மெய்ஞ்ஞான ஒளியில் தரிப்பட்ட ஆதி முஹம்மதாகிறது ஓர் அன்னப்பட்சியின் சொருபத்தில் ஆயிரத் தெட்டுத் திசையாகிய ஜடலத்தின் ஆயிரத்தெட்டு நரம்பு ஸ்தானங் களிலும் ஆடி நின்றுக்கொண்டிருந்தது இதற்கு ஆலம் ஜபறூத்து என்று ஹதீது குதுஸியில் வெளியாயிற்று. இதன் உள்ளபடி யான கருத்தாவது என்னவெனில், தாய் தகப்பனுடைய ஜடலத் தின் ஆயிரத்தெட்டு நரம்பு ஸ்தானங்களிலும் இரத்த ஸைசாட்ட ஓட்டத்துடன் இச்சையில் கலந்து ஆடி யோடி வந்து நின்ற வொ அன்னமானது என்ன? அன்னத்தின் நிறம் என்ன வென்று யோசித்தீர்களா? அது வெள்ளையல்லவா! இதைக்கூட வெளிப் படையாய்ச் செல்ல வேண்டுமா! சொல்ல வேண்டுமானால் சொல்

வியும் விடுகிறேன். அதுதான் வித்துநாதம் அதைத்தான் ஞான வான்கள் ஞான தந்திர சம்பிரதாயமாய் அன்னப்பட்சி யென்று சொன்னார்கள் அறியவும். அந்த அன்னமானது ஜபறாத்துடைய ஆலத்தில் இருந்து, தன்னுடைய ஒளிவைத் தான்கண்டு. அதாவது தனக்குள் மர்ம இந்திர ஜாலமாய் வந்து நுழைந்து உஷ்ணமான ரப்பைக் கண்டு கூவிற்று. அவ்விதம் கூவின அன்னத்தை அந்த உஷ்ண வடி வானது தன்னாசையாலே உற்றுக் கிருபையுடன் பார்த்த வுடன் அந்த றப்பாசையானது டை அன்னத்தில் அதாவது இந்திரியத்தின் பேரில் ஒரு அணுப்போல் தரித்தவுடன் "இந்த அணுவைத் தான், உமறுப்புலவர் சீறாவில் அணுவிணுக் கணுவாய் என்று கடவுள் வாழ்த்தில் சொன்னார்கள்" கண்டு உறுதியைத் திடப்படுத்திக்கொள்.

அப்பால் அந்த பிரம பரஞ்சோதியானது தன் கபாலத்தின் அணுத் தனையான தூய வொளியின் சாக்கிரமத்தைக் கொண்டு சரீரமான பெரிய கோடி யண்டங்க ளெல்லாம் வெளிச்சஞ் செய்து அதாவது கூடு செய்து "கடல் தன்னில் தரித்தானைக் கண்டு கொண்டேன்" என்ற கருத்தாவது சரீரத்தில் கடல் என்ற நீருடைய உறுப்பானது எது? அதுதான் நேத்திரம். அதற்குள் நின்றுடும் நிருபியாகிய "றாஹால் குதுஸியைக்" கண்டேன் என்பதாம்.

தன்னாசை யால்வந்த நாதம் - அவன்
　　ஞானே கட்டளை ரோதிய வேதம்
அன்ன தெவையும் படைத்து - வகை
　　யாவு முருவுக் குயிராய்ச் சமைத்துப்
பின்னு லேவந்து பிறக்கப் - பல
　　கோல மெடுக்கப் பிரபலஞ் செய்து
மின்னிய மங்குல முள்ள - இந்த
　　மேதினி நிறைந்தானைக் கண்டு கொண்டேனே　(தீன்)

(அவதாரிகை உரை) அவ்விதம் தான் தானாய் எழுந்த ஆசை யானது, அக்கினியின் கோலங் கொண்டு இந்திரிய மாய்விற்று. அது தானே கடல் என்கின்ற "ஐனில்" பீடங்கொண்டு, ஜடலத் திற்குள் பரம ஆத்மாவாக நிற்கின்றது இதைப்பற்றி

வேதங்களெல்லாம் சாட்சி சொல்லி விட்டது. இது இப்படியிருக்க மேற்படி உஷ்ணமானது எவ்வகையான சிருஷ்டிப் பொருள்களையும் உற்பத்தி செய்து, அந்தந்த சுரூபங்களுக்குள்ளேயும் தானே உயிராக நின்று, ரூபங்களைச் சமைப்பித்து, கடைசியில் ஆலமும் இன்ஸான் என்கின்ற மனுஷகோலத்தில் தான் வந்து பிறந்து, தன்னைக் கண்டு கொள்ளும் பொருட்டு உதயமாகித் தனக்கு உதாரணமாக பலபல பேதாபேதமான சுரூபங்களையும் நினைவுக்குள் காணும் படியாக நிர்மித்து அதுவேறு இதுவேறு என்று பேதகப்படுத்திப் பிரபலமாகப் பேசிக்கொள்ளச்செய்து, அவைகளுக்கு ஆகாரமாக மின்னலையும், அந்த மின்னலில் நின்றும் மழை நீரையும் ஏற்படுத்தி, அதன் சம்பந்தமாக இந்த பெரிதான உலகத்தில் எங்கு நோக்கினாலும் ஜீவாத்மாக்களாக நிரப்பிவிட்ட சுயம்பை தான் கண்டு கொண்டேன் என்பதாம்.

வானத்தின் மேகம் பொழிய - இந்த
  வையகத் தானிய மெங்கும் தெளிய
ஊனிலுன் மாதா பிதாவும் - அவ
  னுதிரமே நாதமா யோசை முழங்கி
ஆணொடு பெண்ணு மிணங்கி - வந்த
  வாசைமி னவனொளி வாசந் துலக்கித்
தானத்தில் வந்து தரித்தே உருத்
  தானெடுத் தானையான் கண்டுகொண்டேனே (தீன்)

(அவதாரிகை உரை) ஆகாயத்தில் மேகமானது பொழிந்து வருஷிக்கவும், இந்த பூலோகத்தில் அதன் காரணத்தைக் கொண்டு பலபல தானியாதி விளை பொருள்களையும் விளையச் செய்து, அதன் ஆகாரத்துள்ளே மெதுவாக நுழைந்து இந்திரியமானதால், மாதா பிதாக்களின் நினைவில் தன்னுட்டமாயிருந்த சுபமானது, ஆணுடன் பெண் இணங்கச்செய்து, அவர்களின் இரத்தமே நாத மாக வேலைமாளஞ்செய்து, கற்பம் என்ற கலிமாவின் அச்சு இயந் திரத்தில் வந்து பதிவாகி, ஜடலத்தை உருவாக்கி, தானும் அந்த உருவுக்குள் உருவாக ஒளித்துக்கொண்டிருந்த "ரகசிய வடிவை" தான் இன்னதென்று கண்டுகொண்டேன் என்பதாம்.

அந்தக் கருவித்து நாதப்-அதில்
    அன்னை யுதிரமுங் கூடின நாதம்
அந்த கருவைத்து பூதப்-அது
    ஐந்தெழுத் தாகுமே யோதிய வேதம்
விந்துக்குள்ளே தழல் நீதம்-அது
    வீசும் புகையிலே யோடுஞ் சுவாசம்
அந்தக் குதிரைமே லேறு - நந்தம்
    ஆதியைக் நன்றாகக் கண்டுகொண் டேனே. (நீன்)

(அவதாரிகை உரை) அந்த மாதிரியாக உருவுக் கொண்ட கருப் பொருளான (விந்து நாதமானது) தன்னுடைய தாயின் மாதவிடாய் என்ற சூதகத்தால் கோலஞ் சமைந்த குணத்தினாலே, அது ஐந்து பங்காய் மண், நெருப்பு, காற்று, தண்ணீர், ஆகாயம் என்றும், ஐந்து பூதங்களாய் ஐந்து பஞ்சாட்சரமாக வடிவுகொண்டும், நான்கு வேதங்களையும் தனக்கத்தாட்சியாக ஏற்படுத்தி விட்டு அடி விந்துக்குள்ளே அமைந்திருந்த அக்கினியானது வெளி தோன்றி, ஆனந்த பிரம சொரூப சுடர்விட்டு எரிந்துகொண்டு நின்றது. அப்படி சுடர் விட்டு நின்ற சுடரானது, அச்சுடரில் நின்றும் ஒரு புகையை எழுப்பி விட்டு அப்புகையே சுவாசமாக ஆடவைத்து நமது ரந்திரங்களில் ஆடிகொண்டிருக்கின்றதே அந்த சுவாசக் குதிரையின்மேல் தானே சவாரி செய்து கொண்டு நிற்கின்ற ஆதிவஸ்து வாகிய இராஜக்கருவியை அதாவது "நப்பை" தான் இல்லா வஸ்து தான் என்று திருஷ்டாந்திர மாகக் கண்டு கொண்டேனே என்பதே.

உச்சித மாளிகை கட்டி - அதில்
    உறுப்புக ளாயிரத் தெட்டையு மொட்டி
வச்சிரத் தாலவனை பூட்டி - வனை
    சரியாமல் தாம்பெல்லாம் கயிராகக் கட்டி
மச்சு வீட்டுலகித் பிறந்து - கொலு
    மண்டபத்துக்குள் ளேதானு மிருந்தே
வைச்சுக் கைபிற்சூட்ச மாட்டும்-நம்மை
    வகுத்த சூதாவையான் கண்டு கொண்டேனே. (நீன்)

(அவதாரிகை உரை) இன்னது தான் என்ற எண்ணமில்லாமல் இருந்த நினைவானது, கடைசியாக யாரும் அதிசயப்படும்படியான

ஒரு சிறுதுளி இந்திரியத்தாலே ஜடலம் என்ற ஒரு வீட்டைக் கட்டி முடித்து, அதிலே உறுப்புகளாகிய ஆயிரத்தெட்டு கருவி களையும் அதிலே ஒட்டியிருக்கச்செய்து, வச்சிரம் என்ற உஷ்ண நாடியை அதில் விளக்கேற்றச் செய்து, அவ்விதம் எரியும் காந்தி யானது அமர்ந்து விடாமல் சரீரத்தை நரம்பு என்ற கம்பிகளால் தொடுத்துக்கட்டி, சிரசு என்கின்ற மெத்தை வீட்டில் பொற்கட்டில் விமானக் கண்ணாடியாகிய நேத்திரத்தில் தன் உதய பீடத்தை ஏற் படுத்தி, தன் வல்லமையை மூச்சென்கிற ஒரு கச்சைக்கயிற்றால் சூட்சம் ஆடிவருகின்ற ''குதா என்னும் ரப்பை'' நான் கண்டு கொண்டேன் என்பதாம்.

கண்டதுங் கேட்டது மல்ல - அங்குக்
கருதி முடிந்த தலங்களு மல்ல
அண்டமும் பிண்டமு மல்ல - நல்ல
அகார வுகார சிகார மு மல்ல
மண்டல மூன்றுக்கு மல்ல - மறை
வாக நின்றிடும் வாசியு மல்ல
அன்றுதி யெங்கு நிறைந்து - நம்மை
ஆளும் ரஹ்மானைக் கண்டுக்கொண் டேனே. (தீன்)

(அவதாரிகை உரை) நாம் காணக்கூடிய பொருளுமல்ல. அல் லது நாம் இது பரியந்தம் அறிவுடைய தெளிவு இல்லாமல் சாஸ்திரி களின் வாயிலாகக் கேட்டோமே அந்த மாதிரியுமல்ல. அதில் இதில் என்று பலபல ஷெய்குமார்களும் பலபல விதமாக யோசித் துச் சொன்னார்களே அந்த ஸ்தலங்களுமல்ல அல்லது வானத் தில் இருக்கிறதாக சில ஐக்கியங்கள் ஏற்பட்டிருக்கிறதே அப்ப டியுமல்ல. பூமியிலா என்று நோக்கும் போது அப்படியுமல்ல, அல்லது அலிபா அதுவுமல்ல. அல்லது ஹாம் என்ற ஊமை எழு த்தா அதுவுமல்ல. அல்லது ஸீறு அதுவுமல்ல, அல்லது பூமி முதலிய மற்ற மூன்று உலகங்களிலும் இருக்கிறதா என்று யோசிக் கும் போது அப்படியுமல்ல. அல்லது இரகசிய தோற்றத்துடன் நின்றோடக்கூடிய உதானவாயுவா அதுவுமல்ல அப்படியான குணத்துடன் எல்லா தோற்றப் பொருள்கள் தோறும் பொதுவற

நிறைந்து ஜீவபொருள்களை நடத்திக்கொண்டு வருகின்ற சுயம்பான ''ஹக்கை'' நான் கண்டு கொண்டு விட்டேன் என்பதாம்.

கண்டதுங் கேட்டதுந் தானே - அங்குக்
    கரு தி முடிந்த தலங்களுந் தானே
அண்டமும் பிண்டமுந் தானே - நல்ல
    அகார வுகார சிகாரமுந் தானே
மண்டல மூன்றதுந் தானே - மறை
    வாக நின்றிடும் வாசியுந் தானே
அன்றுதி யெங்கு நிறைந்து - நம்மை
    ஆளும் றஹ்மானைக் கண்டுக்கொண் டேனே (தீன்)

(அவதாரிகை உரை) அருப தோற்றத்தில் மேலே சொல்லிய மாதிரியினுல் சொருப தோற்றத்திலேயே நாம் பார்க்கிற மனுஷர் கள் எல்லாம் அதுதான், கேட்கின்ற வேத நூல், பிரசங்கம் எல்லாம் அதன் அத்தாட்சிதான் ஞானவான்கள் திட்டப்படுத்திக் காட்டிய ஸ்தலங்களெல்லாம் அதனுடையதுதான். ஆகாயமும் அதுதான் பூமி என்பதும் அதன் விபத்துதான், அவியும் அதுதான். ஹூ என்ற ஊமை அட்சரமும் அதுதான். ஸீன் என்ற எழுத்தும் அதுதான் மூன்று உலகமும் அதாவது முக்கமலங்களும் அதன் வெளிச்சஞ் செய்யக்கூடியதுதான். இவைகளுக்கிடையே சுவாச மயத்துடன் மயமாய் நிற்கும் பிராணவாய்வும் அதுதான் இவ்வித அநந்தக்கோடி ஜீவஜந்துக்களாக உருவெடுத்து ஜாலம்பர ஹிதமாக அரசு செலுத்திக்கொண்டு வருகின்ற ''றஹ்மான்'' என்ற சுத்த பரி பூரணத்தை நான் கண்டுகொண்டேன் என்பதாம்-

ஊத்தைச் சடலம் படைத்து - உலை
    யாமலே யுப்புக் கடலைப் புகட்டி
வார்த்தைப் பசப்பிட்டு வைத்து - வகை
    யாகவே ஒன்பது வாசலு மிட்டு
ஆத்தும மென்றும்பேர் வைத்து - ஐந்து
    பேரையுமொன்றுக வாடவும் வைத்துக்
காற்றைப் பிடித்தே யடைத்தே - ஆர்க்குங்
    காணுமல் நின்னைக் கண்டுக்கொண் டேனே (தீன்)

(அவதாரிகை உரை) எத்த நேரமும் அழுக்கும் சிக்கும் உடைய சரீரத்தை உற்பத்தி செய்து, இந்த சரீரம் உலேந்து கெட்டுப்போகாதபடி உப்புக் கடலான வியர்வை நீரை அங்கு ஆதிக்கமும் ஏற்படுத்தி, அதற்கேற்ற ஒரு பரஞ்சோதி அக்னியின் இயந்திரத்தைக்கொண்டு, நாட்டம், ஓட்டம், தேட்டம், ஆட்டம் இவைகளை உண்டாக்கி, இவைகளினாலே பலபல விதமான பாவைகளையும் பேச்சு வார்த்தைகளை உதயமாக்கி, வகை வகையான கோட்டை வாசல்கள் ஒன்பதும் திறந்து வைத்து, இவ்விதம் கட்டிய ஒரு சரீர வீட்டுக்கு ஆத்மம் என்று பேர் நாமமும் சூட்டி, இன்னும் அதற்கு மண், தண்ணீர், அக்னி, காற்று, ஆகாயம் என்கிற ஐந்து சுத்த வீரர்களைக் கொண்டு அந்த வீடு அன்றுடம் ஆடவோடச் செய்து, அந்தத் துருத்திக்கு சுவாசம் என்ற காற்றை வேண்டிய அளவு உள்ளே செலுத்தி அடைத்து வைத்து அதற்குள்ளே ஒரு பூதங்களுக்குந் தெரியாமல் நிற்கின்ற "றப்பை" தான் பிரயாசையின் வைராக்ய மஹிமையாலே ஒரு மட்டும் இன்னது தான் என்று கண்டு கொண்டேன் என்பதாம்.

ஓதிய வேங்காரக் கோட்டை - யதி
    லொன்பது வீதி யொழுங்கான தோட்டமு
சாதிக் குதிரைதான் வேகு - சவு
    தாரி மேற்கொண்டு நடத்தினு னீதம்
வீதிக்கு வீதி குதிரை - விட்டு
    வேடிக்கை யாகப் பரியை திருத்திப்
பாதமில் லாப்பரி யேறும் - தம்மைப் -
    படைத்த பிரானையான் கண்டுகொண்டேனே. (தீன்)

(அவதாரிகை உரை) அடே, ஞானத்தை உணர்ச்சி பண்ண வந்த மகனே! நீ பள்ளிக்கூடத்தில் இருந்து அரி என்று படித்தாயே, அந்த ஒ வன்றவைக்கொண்டு அமைத்து இருக்கின்ற கோட்டையான தலேயின் கண் ஒன்பது வகையான வீதிகளும், ஒரு ஒழுங்கான தோட்டமென்கிற புருவமத்தியும் இருக்கிறது பார்! அதில் ஜாதியாகிய நூஹுல் குதுஷியின் உஷ்ணத்தின் ஆவியாகப் புகைத்து வருகின்ற சுவாசத்தின்மேல் சவாரி செய்து, ஜடலத்தின் எல்லா

